௩. "கரவாத திண்ணன்பின் கண்ணன்னார் கண்ணும்
இரவாது வாழ்வதாம் வாழ்க்கை."

௪. "கண்ணுள் மணியேபோல் காதலால் நட்டாரும்
எண்ணுந் துணையிற் பிறராகி நிற்பரால்"

௫. "கற்றார் பலரைத்தன் கண்ணாக இல்லாதான்"

௬. "கண்ணுவார் எனும்உனைக் கைகுவியார் ஆயின்அந்த
மண்ணுவார் நட்பை மதியேன் பராபரமே."

என வரும் அருந்தொடர்களெல்லாம் அருமையை அறிவிப்பதற்கும் உயர்வை உணர்த்துவதற்கும் எழுந்துள்ளன.

இனி, நமது மனதிற்கு இனியாரைக் கண்ட இடமும் காலமும் மறுபடியும் கண்டாலும் கருதினாலும் இன்பம் தருமாதலால், அந்த இடத்தையும் காலத்தையும் உயர்வாக மதித்து வந்தார் நம் முன்னோர். அது பற்றியே அவற்றை அவர், கண்ணென்னும் சொல்லால் சுட்டி வழங்கினர். இதனைப் பண்டைத் தமிழ் நூல்களில் பயில்வோர் யாவரும் ஆராய்ந்து அறியலாம்.

"அரியகற் றாசற்றார் கண்ணும் தெரியுங்கால்
இன்மை அரிதே வெளிறு"

என்ற இடத்தே கண்ணனது பெயரை அடுத்து நின்று இடத்தைச் சிறப்பித்தும்,

"குடி கொழுத்தக் கண்கொடுத்துண்ணு மாக்கள்
இடுகாட்டுள் ஏற்றுப் பனை"

என்ற இடத்தே அது வினையை அடுத்து நின்று காலத்தைச் சிறப்பித்தும் வந்தமை காண்க.

இடத்தைச் சிறப்பிக்க ஒரு பெயரை அடுத்து வருங்கால் ஏழாம் வேற்றுமை யுருபென்றும், காலத்தைச் சிறப்பிக்க ஒரு வினையை அடுத்து வருங்கால் வினையெச்ச விகுதி யென்றும் அது பெயர் பெறும். இக்காலத்தில் இந்த அரிய வழக்கு மறந்து போயிற்று. மற்று, சிறந்த இடத்தைச் சுட்டுதற்கன்றி,

பொதுவாக ஏழாம் வேற்றுமை சுட்டும்படி, இப்பொழுதும் கண்ணுருபு பெயரொடு வழங்கி வருகின்றது. ஆயினும், அது வினையொடு வரும் வழக்கம் அடியோடு அழிந்து போயிற்று. இது நிற்க.

அன்பு, அச்சம், அழுகை, அழிவு, அவலம், அறிவு முதலான குணங்களும் இவற்றின் எதிரான குணங்களும் கருத்துப் பொருளான மெய்ப்பாட்டுக் குணங்களாம்; ஆதலால் இவற்றில் ஏதேனும் ஒன்று ஒருவரிடத்தில் உளதா இலதா என்பதை அவர் முகத்தை நோக்கியே எளிதாக உணர்ந்து கொள்ளுகின்றோம். அவ்வாறு உணர்ந்து கொள்ளும் பொழுது, நமக்குப் பெருந் துணையாக நின்று அவர் குணத்தை உள்ளபடி ஒளியாமல் அறிவிப்பது அவர் கண்ணேயன்றி வேறு உறுப்புக்கள் அல்ல. ஆகையாலேதான், மக்களுடைய பலவேறு குணங்களைக் காட்டுதற்குப் பல கண்ணீற்றுச் சொற்கள் பிறந்து, பயிலாநிற்கின்றன. அவற்றுள், சிலவற்றின் பொருளையும் வழக்கையும் இங்கே புகலுவேமாக.

க. அலக்கண்=கலங்கிய கண்; துன்பத்துக்குக் காரணக் குறி—இலக்கணையால் வந்தது.

"சங்கலங்குந் தடங்கடல்வாய் விடஞ்சுடவந் தமரர்தொழ
அங்கலக்கண் தீர்த்தவ்விடம் உண்டுகந்த அம்மானை
இங்கலக்கும் உடற்பிறந்த அறிவிலியேன் செறிவின்றி
எங்குலக்கப் பிரிந்திருக்கேன் என்ஆரூர் இறைவனையே."

(சு. தேவாரம்.)

உ. அறக்கண்=தரும பிரபு; அருள் வைப்பு எனவுமாம்.

'பறக்கும்எம் கிள்ளைகாள்! பாடும்எம் பூவைகாள்!
அறக்கண்என் னத்தகும் அடிகள்ஆ ரூரரை
மறக்ககில் லாமையும் வளைகள்நில் லாமையும்
உறக்கமில் லாமையும் உணர்த்தவல் லீர்களே."

(சு. தேவாரம்.)

௩. இடுக்கண்=இடுங்குகண்; விகாரம்=மலர்ந்த முகம் ஒழிந்து கண் இடுங்கும்படி உறுவது எனத் துன்பத்துக்குக் காரணக் குறி.

"உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு" (திருக்குறள்.)

௪. உறுகண்=துன்பம். உறல் என்னும் சொல் துக்கத்தை அடைதற்குரிய வினை. இதன் எதிர் மொழியாகிய பெறல் என்பது சுகத்தை அடைதற்குரிய வினை. இஃது இவ்வாறென்பதை உறு பெறு எனும் பகுதியடியாகப் பிறந்த ஊறு பேறு என்னும் பெயர்கள் முறையே துன்பம் இன்பம் என்னும் பொருளிலே வழங்குதல் நோக்கித் தெளிக.

"உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு" (திருக்குறள்.)

௫. களைகண்=புகல்; பற்றுக்கோடு; துன்பத்தைக் களையும் இடம் எனக் காரணக்குறி; வினைத் தொகை.

"பற்றிலா வாழ்க்கை வாழ்ந்து பாழுக் கேநீர் இறைத்தேன்;
உற்றலால் கயவர் தேறார் என்னும்கட் டுரையோ டொத்தேன்;
எற்றுளேன்; என்செய் கேன்நான்? இடும்பையால் ஞான மேதும்
கற்றிலேன்; களைகண் இல்லேன்; களவூர் வீரட்ட னாரே!"
(அ-தேவாரம்.)

௬. தறுகண்=அஞ்சாத்தன்மை.

"இறுவரை வீழ இயக்கற் றவிந்த
தறுகட் டகை அரிமா போன்றான்—சிறுகட்
பெருங்கைக் களிறெறிந்து பின்னதன் கீழ்ப்பட்ட
கருங்கழற் செவ்வேலவன்" (புற-வெண்பா.)

௭. பழங்கண்=வறுமை; மெலிவு.

"கன்றுபுணர் பிடிய குன்றுபல நீந்தி
வந்தவண் இறுத்த இரும்பேர் ஒக்கல்
தொல்பசி உழந்த பழங்கண் வீழ" (பதிற்று.)

௮. புதுக்கண்=செதுக்கண்

"மையல் யானை வயாஉயிர்த் தன்ன
நெய்யுலை சொரிந்த மையூன் ஓசை
புதுக்கண் மாக்கள் செதுக்கண் ஆரப்
பயந்தனை மன்னால் முன்னே"—புறம்.

'ஓசை-பொரியல். புதுக்கண் என்பதில் கண் அசை. செதுக்கண்-ஒளி மழுங்கின கண்; செதுகின குடர் என்றுமாம்' என்றார் உரைகாரர்.

௯. புன்கண்=வாட்டமுற்ற கண் எனத் துன்பத்துக்குக் காரணக் குறி.

"சான்றோர் செல்வம் என்பது சேர்ந்தோர்
புன்கண் அஞ்சும் பண்பின்
மென்கட் செல்வம் செல்வமென்பதுவே" (நற்றிணை.)

இச்சொல் முதற் குறையாய்க் கண்ணெனவும் வரும்.

" மற்றஞ்சாதே தின்ப தழுவதன் கண்" (பழமொழி.)

௰. முதுகண்.

"என்றும் அறனே களைகண் என்பார்" (இலக்கணை)

என்ற இடத்தே 'முதுகண் என்றாற்போல வழக்கு' எனக் கூறினார் ஆசிரியர் நச்சினார்க்கினியர். இதனானே முதுகண் என்றொரு சொல்லும் உண்டெனத் தெரிகின்றோம்.

௧௧. வன்கண்=மறம்; இரக்க மின்மை. இதன் எதிர்மொழியாகிய மென் கண்ணுக்குக் கண்ணோட்டம் என்பது பொருள்.

"என்கண் இனையர் எனக்கருதின் ஏதமாம்:
தங்கண் ணாரானும் தகவில கண்டக்கால்,
வன்கண்ண னாகி ஒறுக்க ஒறுக்கல்லா
மென்கண்ணன் ஆளான் அரசு" (பழமொழி.)

கஉ. வெங்கண்=கொடுமை; வைராக்கியம்.

"வெங்கண் வேந்தற் கமிர்தாகி" (நாமகள்)

மேலே காட்டியவை யாவும் கண்ணெனும் சொல்லை விகுதிபோல ஈற்றிலே பெற்று வேறு சொல்லோடு சேர்ந்து, ஒரு சொல் நீர்மையடைந்து, பெயர்களாகவே வழங்கிவருகின்றன.

இன்னும், அங்கண் விசும்பு, குறைக்கண் நெடும்போர், ஞெள்ளலாங்கண், ஈங்கண், ஊங்கண், யாங்கண், கழைக்கண் நெடுவரை என்பன போன்ற தொடர்கள் இடத்தையே சிறப்பித்து நிற்கின்றன.

இஃது இவ்வாருக, பெருங்கண் மான்பிணை, கருங்கண் எயிற்றி, கடுங்கண் கேழல், இருங்கண் எருமை, கொடுங்கண் இஞ்சி, நெடுங்கண் காக்கை, மழைக்கண் அரிவை, செங்கண் ஏற்ருன், பைங்கண் வெள் அரவு, தீக்கண் உழுவை என்னும் இவைபோன்ற தொடர்களெல்லாம் சினையின் (கண்) தன்மையைக் காட்டவந்தன அல்ல; மற்று முதலின் (உயிர்கள்) குணத்தைக் குறிப்பாக உணர்த்தியே நிற்கின்றன. செங்கண்மால் என்பதற்கு 'செந்தாமரை மலர்போலும் அழகிய கண்களையுடைய திருமால்' எனப் பொருள் விரிக்கின்ருேம். இவ்வகையான முன்னக்கிளவிகள் நம் தென்மொழியிலே பல உண்டு. இது நிற்க.

கடைக்கண், சிறங்கண், புறங்கண், பேழ்கண் முதலிய பெயர்கள் வினைப்படுத்தற் குரிய இகர விகுதியோடு புணர்ந்து, கடைக்கணி, சிறங்கணி, புறங்கணி, பேழ்கணி என முதனிலையாய் நின்று, இடைநிலையும் இறுதிநிலையும் பெற்று வருகின்றன.

க. கடைக்கணித்தல்-கடைக்கண்ணுல் நோக்குதல் (கடைக்கண்-கண்ணினது கடை). இச்சொல் நோக்குவான் உயர்வும், நோக்கப்படுவான் தாழ்வும் விளக்கிக்கொண்டே வருகின்றமையால், அருளுக்கு உரியனுக்குதல் என்ற அரும்பொருளையே உடைத்து.

"அருமந்ததேவர் அயன்திருமாற் கரியசிவம்
உருவந்து பூதலத்தோர் உகப்பெய்தக் கொண்டருளிக்
கருவெந்துவிழக் கடைக்கணித்து என் உளம்புகுந்த
திருவந்தவா பாடித் தெள்ளேணம் கொட்டாமோ!"

(திருவாசகம்.)

உ. சிறங்கணித்தல்-அரைக் கண்ணால் நோக்குதல்.

"குறிக்கொண்டு நோக்காமை அல்லால் ஒருகண்
சிறக்கணித்தாள் போல நகும்" (திருக்குறள்.)

'சிறக்கணித்தாள் என்பது செய்யுள் விகாரம், சிறங்கணித்தல் சுருங்குதல்' என்றார் பரிமேலழகியர்.

ந. புறங்கணித்தல்-பராமுகம் செய்தல்.

"புனக்காவலின்முன் புகுத்திய அன்னை புறக்கணித்து
மனங்காவலின்மையின் இன்றுவைத்தாள் உயிர்வாழ்க்கை"

(தணிகை.)

ச. பேழ்கணித்தல்-விழித்தல். இச்சொல், ஓர் அரிய பொருளைக் காலத்தே கொள்ளாது கையிழந்தவன் அடையும் மெய்ப்பாட்டைத் தெரிவிப்பது.

"பொரசியாதோ கீழ்க்கொம்பு நிறைகுளம் என்பது போலத்
திசைநோக்கிப் பேழ்கணித்துச் 'சிவபெருமான் ஓ!' எனினும்
இசையாளுன் என்திறத்தும் எனை உடையாள் உரையாடாள்
நசையானேன்; திருத்தில்லை நடம்பயிலும் நம்பானே!"

(திருவிசை.)

இதுவரையும் சொல்லிப் போந்தவற்றால்; கண்ணீற்றுச் சொற்கள் வந்த வாறும், அவற்றின் பொருட்பாடும், வழக்காறும் ஒருவாறு தெரிவித்ததாம் என்க.

மயிலை. சீனி. கோவிந்தராசன்.

# திருநெல்வேலிப் பொற்றாமரைத் தீர்த்தம்

(சஅ ஆம் பக்கத் தொடர்ச்சி)

இத்தீர்த்தத்தில் வசிட்டன் வாமதேவன் காசியபன் சாபாலி ப்ராசரன் வியாசன் பிங்கிருடி கௌசிகன் ஆகிய எட்டு இருடிகளும் வசிப்பார்கள். மதுகைடபர்கள் பிரமனிடமிருந்து வேதங்களை அபகரித்துச் சென்றகாலத்துப் பிரமதேவர் இத் தீர்த்தக் கரையிலிருந்து செய்த தவத்திற்கிரங்கித் திருமால் வெளிப்பட்டு அத்தீயோரைக் கொன்று வேதங்களைக் கொண்டு வந்து பிரமதேவரிடங் கொடுத்தனர். தன்னுயகன் தன்னாற் படைக்கப்பட்ட திலோத்தமையை விரும்பிய குற்றம் நீங்கக் கலைமகள் நெல்லையினின்றுங் காசிக்குச் சென்றாளாக, அங்கிருந்த உரோமச முனிவர் இத்தீர்த்தத்தின் பெருமையை அவட்கு எடுத்துக்கூறி மீண்டும் நெல்லைக்கு விடுப்ப அவள் அவ்வாறே மீண்டு இத்தீர்த்தமாடிச் சிவபிரானருள் பெற்றாள். சங்கப் புலவோர்களும் இத்தீர்த்தக்கரையிற் றவஞ்செய்து பல வரங்கள் பெற்றனர். இன்னு மித்தீர்த்தத்தின் பெருமைகள் பல.

நீர் நிலைகளிலே அசுத்தஞ் செய்யலாகாதென்பது பொது விதி. அதனினும் சிவதீர்த்தங்களிலே அசுத்தம் செய்வதாயின் அது பெருங் கொடும்பாவ மென்பது சாத்திரங்கள் கூறுகின்ற உண்மை. இப்பொழுது மேற்குறித்த பொற்றாமரைத் தீர்த்தத்திலே செய்யப்படும் அநாசாரங்களுக்கு அளவேயில்லை. தீர்த்தத்தின் பக்கத்தில் சிற்றுண்டி விற்குங் கடைகளிருத்தலின் ஏற்படும் அசுத்தம் அவற்றுள் ஒன்று. இக் கடைகளில் சிற்றுண்டி வாங்குவோர் தாம் உண்ட எச்சிலிலையை இத்தீர்த்தத்துள் எறிகின்றனர். சிறிது காலத்திற்கு முன்வரை இத்தீர்த்தம் அசுத்தமாகாமலிருத்தற்கு அவ்வக்கால தருமகர்த்தர்கள் சில ஏற்பாடுகள் செய்திருந்தனர். ஒரு காவலாளனை நியமித்து அசுத்தஞ் செய்யாது தடுத்தனர். அசுத்தம் செய்யப்பட்டால் அதனை அவ்வப்போது அப்புறப்படுத்தலுஞ் செய்வித்தனர். மகோற்சவ காலங்களில் திரளான ஜனங்கள் கூடுதலால் உண்டா

கும் அசுத்தம் மற்றொன்று. அக்காலத்தில் தர்மகர்த்தர்கள் தீர்த்தத்தின் நாற்புறமும் இரவில் தீபங்கள் வைப்பித்துப் பல காலமும் காவலர் சுற்றி வருமாறு செய்தல்வேண்டும். சென்ற தையமாவாசையன்று நடந்ததும் சிவாகமங்களில் விதிக்கப் படாததுமாகிய தெப்பத்திலே இத்தீர்த்தக்கரை மலங்கழிக்கு மிடமாக மாற்றப்பட்டது. பலநாட்கள் கழிந்தும் அந்தப் பக்க மாகத் தரிசனம் செய்யச் செல்வோர்க்குத் துர்க்கந்தம் வீசுகின் றது. இதனைத் தர்மகர்த்தர்கள் ஏனோ கவனிக்கின்றார்களில்லை! இத்தீர்த்தத்தின் அகத்துள்ள சக்கர தீர்த்தத்திலும் பொற்றா மரைத் தீர்த்தத்திலுமுள்ள நீரோடு, ஊரின் நடுவிலே செல்லும் கால்வாயிலினின்றும் இத்தீர்த்தத்திற்கு நீர் கொண்டுவந்து சேர்க்கப்படுகிறது. ஆனால் இங்கேவந்து சேரும் நீர் வெளியே போவதற்குரிய மடை தற்காலம் அடைபட்டிருப்பதால் ஏற்படும் அசுத்தம் பிறிதொன்று. இவ்வாலயத்தில் பூசைசெய்யும் ஆதி சைவர் காலையிலும் மாலையிலும் பொற்றாமரைத் தீர்த்தத்திலே தான் நீராடுவது மரபு. அன்றியும் ஆலயத்தின் பக்கத்துள்ள வீட்டார் இத்தீர்த்தத்திலே நீராடி ஸ்நானபானங்களுக்கு இந் நீரைக் கொண்டுசெல்கின்றனர். சிற்றுண்டிக் கடைக்காரர்கள் இத்தீர்த்த நீரையே அங்கு வருவார்க்கு உதவுகின்றனர். இத் தீர்த்தத்திலே பிரதோஷம் முதலிய விசேட நாட்களிலே ஆட வரும் பெண்டிரும் நீராடுகின்றனர். இவ்வாறெல்லாம் பயன் படும் இத்தீர்த்தநீர் வெளிப்போக்கில்லாமற் கட்டிநிற்பதாயின் அதனால் விளையுந்தீமை சொல்லியமையுமா? சில ஆண்டுகட்கு முன்வரை தீர்த்தத்தின் கீழ்க்கரையிலிருந்த போக்குமடைவழி யாக ஊரின்வடகீழ்மூலையிலுள்ள சந்திரபுஷ்கரணியாகிய தெப் பக்குளத் தீர்த்தத்திற்குப் பொற்றாமரை நீர் சென்றுவந்தது. இப்பொழுது நடந்துவரும் பொற்றாமரைத் திருப்பணியில் அப்போக்குமடையின் ஆவசியகம் கவனிக்கப்படவில்லையென்றே நான் கருதுகிறேன். அம்மடை முழுவதுமின்றி அடைக்கப்பட் டிருக்கின்றது. இவ்வாறாயின் இத்தீர்த்தம் நாளடைவில் நச்சுப் பொய்கையாக மாறி மிகுந்த தீமைகளை விளைக்குமென்பதில் யாதும் ஐயமில்லை. தமது வீட்டிலுள்ள நீர்நிலை யொன்று

இவ்வாறு அசுத்தமாக்கப்படுவதாயின் அதனை எவரேனும் பொறுத்திருப்பாரா? அதனினும் பதின் மடங்காகவன்றோ பலர்க்கும் பொதுவாக உபயோகப்படும் நீர்நிலைகள் காக்கப் படல் வேண்டும். அதனினும் நூறு மடங்காகவன்றோ சிவா லயத் தீர்த்தங்கள் பேணப்படல் வேண்டும். இவ்வுண்மையைத் தர்மகர்த்தர்கள் கவனியாதிருத்தல் மிகவும் வியசனிக்கத் தக்கது. கூடிய விரைவிலேனும் போக்குமடையை எவ்வளவு கஷ்டப்பட்டும் துலக்கித் தீர்த்தத்தைப் பேணுவாராக. பாத் திரந் தேய்த்தல் ஆடை தோய்த்தல் முதலியவற்றால் உண்டா கும் அசுத்தம் இன்னொன்று. இவ்விதம் பல அசுத்தங்கட் கும் நிலைக்களமாக அத்தீர்த்தத்தை யாக்காது தெய்வ சாந் நித்தியம் விளங்கும் சிவதீர்த்தமாக அதனை விளக்குதல் வேண் டும். இத்தீர்த்தத்தின் மேல்கரையில் முன்பு தமிழிலக்கண இலக்கியங்களே வல்ல சைவராலே சிவபுராண படனம் சிவ தேவஸ்தானத்துப் பொருளுதவியால் நடத்தப்பட்டது. இப் பொழுது அது நிறுத்தப் பட்டிருக்கிறது. சிவபெருமானது முழுமுதற்றன்மையும் அவர் நமக்கு அருள் செய்யும் வண்மை யும் ஜனங்கள் அறியாராயின் சிவபக்தி யெவ்வாறு நிகழும்? சிவாலயங்களிலே 'வியாக்கியான மண்டப' மொன்று அமைத்து அதிற் கற்றுவல்ல பெரியோர்களாலே புராணங்கள் சாத்திரங் கள் எடுத்துரைக்கப்படல் வேண்டுமெனச் சிவாகமம் ஆணை தருவதாயிற்று. அதனினும் சமயநூற் கல்வியும் உணர்ச்சியும் அருகிவரும் இக்காலத்திலே சமய வளர்ச்சிக்கு 'வியாக்கியான மண்டபம்' எவ்வளவு அநுகூலமாயிருக்குமென்பதை அவர்கள் சிறிது சிந்திக்கக்கடவர்.

தர்மகர்த்தராயினோர் இச்செய்திகளை யெல்லாம் சாவதான மாகக் கவனித்தல்வேண்டும். பொது ஜனங்களும் இவற்றைக் கவனிப்பார்களாயின் அவர்களும் துணையாயேயிருப்பர். தர்ம கர்த்தர்கள் தாங்கள் செய்யவேண்டிய போக்குமடை துலக்கு தல், காவலாளர் நியமித்தல், அசுத்தங்களை அப்புறப்படுத்து வித்தல், வியாக்கியானம் செய்வித்தல் முதலியவற்றோடு இலக்கக் கணக்காகத் துண்டுப் பத்திரிகைகளில் சிவாலயத்திற் செய்ய

லாகாத குற்றங்களையும் சிவதீர்த்தங்களிற் செய்யலாகாத குற்றங்களையும் அச்சிட்டு அங்கு வருவாரனைவருக்கும் விதி யோகித்தல் வேண்டும். கல்வியாலே அறிவும் அறிவாலே ஒழுக்கமும் வருமாதலின் குற்றம் நிகழா திருத்தற்குக் கல்விப் பெருக்குச் சிறந்த காரணமாகும். சிவாலயங்களிற் றொழில் செய்யும் தொழிலாளர்களும் உத்தியோகஸ்தர்களும் கூடிய வரை ஆசாரமும் பக்தியுமுடையவரா யிருத்தல் வேண்டும். பொற்றாமரைத் தீர்த்தத்தின் தென்மேற்கு மூலையில் எச்சிற் றம் பலக்குப்பை நாடோறும் பெருகிக்கொண்டே வருகின்றது. இவ்விடத்து இவ்வசுத்தஞ் செய்வோர் பெரும்பாலும் வெளி ஜனங்களாயிருத்தல் முடியாது. ஆதலின் இவ்வகை அநா சாரங்கள் நிகழாது செம்மைப் படுத்துதல் சைவராயினோரனை வர்க்கும் பொதுவாகவும் தர்மகர்த்தர்கட்குச் சிறப்பாகவுமுள்ள கடமையாகும்.

'செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
கவிகைக்கீழ்த் தங்கு முலகு'

வி. சிதம்பரராமலிங்க பிள்ளை.

---

# தமிழ்ப்புலவர் வரலாறு:

## அகத்தியர்

(கச-ம் பக்கத் தொடர்ச்சி)

### சமயம்

இனி, அகத்தியனாரது சமயம் யாதென்பது பற்றியும் சிறிது கூறுதும். இதுகாறும் கூறிவந்தவற்றிலிருந்தே அவர் சிவபெருமானை முழுமுதற் கடவுளாகக் கொண்டு வழிபடும் கொள்கையுடையர் என்பது பெறப்படும். அவர், சிவனார் பாலும் முருகவேளிடத்தும் தமிழியல் கேட்டனர், சிவபெருமா னிடத்தே ஆகமங்கள் பெற்றனர், கொங்கு நாட்டிலே சிவவுரு

நிறுவி வழிபாடாற்றினர், திருக்குற்றாலத்திலே திருமாலுருவைக் குழைவித்துச் சிவலிங்கமாக்கி வழிபட்டனர் என்னும் இவையெல்லாம் அவர் சிவநெறி நிற்போர் என்பதனை விளக்குமன்றோ ? எனினும் சைவம் என்பது பல்லாயிரம் ஆண்டுகளின் முன்பிருந்த கொள்கைகளிற் சிறிதும் மாறுபடாமலே இன்றைக்கும் இருக்கிறதென்று கூறுதல் அமையாது. உலகிலுள்ள எல்லா மதங்களுமே காலந்தோறும் வேறுபட்டு வருதல் கண்கூடு. சைவத்தினுள்ளும் பல பிரிவுகள் நூல்களிலே பேசப்படுகின்றன. இப்பொழுது சில பிரிவுகள் கைக்கொள்ளப்படுமாறும் காண்கின்றோம். ஒரு பிரிவினுட்பட்ட கொள்கைகளும் நாளடைவில் திரிபெய்தி வருகின்றன. இவ்வாற்றால் அகத்தியனாரைப் பொதுவகையாற் சிவநெறியாளர் என்னலாமன்றி சைவத்துட்பட்ட இன்ன கொள்கையினர் என வரையறுத்தல் சாலாது.

இனி, அகத்தியனார் பல இடங்களில் சிவபெருமானை வழிபட்ட வரலாறுகளும் குறிப்புக்களும் உள்ளன. தமிழ் நாட்டிலே திருமறைக் காட்டின் அணித்தாகவுள்ள ஓர் திருப்பதி அகத்தியான் பள்ளி எனப்படுகின்றது. திருமறைக்காட்டிலே சிவபெருமானது திருக்கல்யாணக் கோலத்தைத் தரிசிக்க வந்த தமிழ் முனிவர் இருக்கை அமைத்துக்கொண்டு தங்கிய இடமாகலின் அஃது அகத்தியான் பள்ளி எனப்படுவதாயிற்று என்பர். அங்கு அகத்தியர் திருவுருவும் இருக்கிறது. பொதியிலில் திருமணக்கோலம் தரிசித்தா ரென்பதும் வரலாறு. பாவநாசத் திருப்பதியின் அணிமையில் பொதியின் மலைக்கண்ணே அகத்தியாச்சிரமம் என்னும் பெயரால் ஒரு கோயிலும் உளது. மற்றும் பல திருப்பதிகளில் அகத்தியர் சிவபெருமானை வழிபட்டசெய்தி கேட்கப்படுவதுடன்; ஆங்காங்கு அகத்தியரது திருவுருவும் காணப்படுகிறது. அவற்றுள் திருச்சிராப்பள்ளியும் ஒன்று. இங்ஙனம் அகத்தியர் இறைவனை வழிபட்ட செய்தி திருநெறித் தமிழ் வேதம் அருளிய சமய குரவர்களாலும் குறிக்கப்பெறுகின்றது. பின் வரும் திருப்பாட்டுக்கள் காண்க.

அன்றாலின் கீழிருந்தங் கறஞ்சொன்னானை
அகத்தியனை யுகப்பானை யயன்மால்தேட
நின்றானைக் கிடந்தகட னஞ்சுண்டானை
நேரிழையைக் கலந்திருந்த புலன்களைந்தும்
வென்றானை மீயச்சூர் மேவினானை
மெல்லியலா டவத்தினிறை யளக்கலுற்றுச்
சென்றானைத் திருவீதி மிழலையானைச்
சேராதார் தீநெறிக்கே சேர்கின்றாரே.

(திருநாவுக்கரசர்.)

வந்தொரிந்திரன் வழிபட மகிழ்ந்து
வானநாடுநீ யாள்கெனவருளிச்
சந்தி மூன்றிலுந் தாபரநிறுத்திச்
சகளிசெய்திறைஞ் சகத்தியர் தமக்குச்
சிந்துமாமணி யணிதிருப் பொதியிற்
சேர்வுநல்கிய செல்வங்கண்டடைந்தேன்
செந்தண்மாமலர்த் திருமகள் மருவுஞ்
செல்வத்தென்றிரு நின்றியூரானே.

(சுந்தரர்.)

குறிப்பு:—இதுகாறும் அகத்தியர் என்று பெயரிட்டெழுதி வந்த இவ் வரலாறு, சில திருத்தங்களுடனும் சித்தர் நூல் ஆராய்ச்சியுடனும் தனிப் புத்தகமாக வெளிவரும்.

பண்டிதர் மு. வேங்கடசாமி நாட்டார்.

---

# மொழிகள் வெளியிடு மூண்மை

(கசு-ம் பக்கத் தொடர்ச்சி)

## தொலை

இது தொன்மை, தொன்று இவற்றுடன் ஒற்றுமையுடைய தாகி சேய்மை என்னும் பொருளில் வரும். கலை, விலை, நிலை, என்பன கல், வில், நில் என்ற முன்னிலைகளாற் பிறக்குமாறு, தொலை என்பதும் தொல் எனும் முளையினின்றுந் தோன்றுவது.

'தொல்வரவு' 'தொல்வினை' 'தொல்காப்பியம்' இவற்றை நோக்குக. "தொலிநே சேசின பூஜா பலமோ" எனவரும் தியாகராஜர் பாடலில், தொலி என்பது பழமை. தமிழில் தொலி என்ற சொல் உமி அல்லது தோலைக் குறிக்கும். இவற்றிற்குரிய தொடர்பு விளங்கவில்லை. தொலித்தல்=உமிபோக்கல், தோலுரித்தல். தொலித்தல் என்பது தெலுங்கில் ஒழித்தல் என வருமென்று திரு. கார்த்திகேய முதலியார் குறித்துளார். தொல்லை எனுஞ் சொல் பழமையைக் காட்டுவதுடன் தொந்தரவு என்ற பொருளையுந் தரும்; இவ்விரண்டு பொருள்களுக்குமுள்ள பொருத்தமும் தெளிவாய்த் தெரியவில்லை.

தொலைதல்=ஒழிதல், கெடுதல், சாதல், நீங்குதல்; தொலை= சேய்மை; தொலைதல்=சேய்மைப்படுதல், அதாவது நீங்குதல். நம்மால் வெறுக்கப்படும் ஒருவன் நம்மை விட்டு நீங்குவானாயின் 'அவன் தொலைந்தான்' என்று சொல்வது வழக்கம். ஒரு பொருள் 'தொலைந்தது' என்று சொல்லும்போது அப்பொருள் அண்மை நீங்கிச் சேய்மை யடைந்தது என்பதுதான் கருத்து. இது மற்றொரு வகையானு முணரப்படும். 'பொற்கிண்ணம் எங்கே யிருக்கிறது?' என்ற கேள்விக்கு அதை வைத்திருக்கும் மகன் 'அஃது என்னண்டை யிருக்கிறது' என்று விடையளிக்கிறான். இங்கு 'அண்டை' என்பது 'தொலை' என்பதுடன் முரண்பட்டு நிற்பதை நோக்குக. 'அஃது என்னிடத்துளது', 'அஃது என்கிட்ட இருக்கிறது' என்ற சொல்லினும் முற்குறித்த கருத்தே விளங்குதல் காண்க. அன்றியும் தொலைந்த ஒன்று கைக்கு வருமாயின் 'அது கிட்டிற்று' அல்லது 'அது கிடைத்தது' என்று நாம் பேசுவதும் மேலே சொன்னதை வற்புறுத்தும். 'நான்' என்பதற்கும் வையகத்திலுள்ள பொருள்களுக்குமுள்ள தொடர்பைத் தமிழர் எங்ஙன முணர்ந்தார் என்பதை இதனால் ஒருவாறு அறியலாம். 'கடுக்கன் தொலைந்து போயிற்று' என்பதிலுள்ள கருத்தை வேறுவகையாய்ச் சொல்ல வேண்டுமானால், 'கடுக்கன் காணாமற் போயிற்று' என்றுதான் கூறவேண்டும். கடுக்கன் இல்லாமற் போகவில்லை; அது பார்

வையிலில்லை அல்லது கண்ணிற்கு மறைந்தது என்று சொல்வது தேர்ந்து தெளிந்தவரது கூற்றாகும். "காணமற் போட்டு விட்டேன்" என்பதிலுள்ள பொருளை வடமொழியில் "தாரை வார்த்து விட்டேன்" என்று சொல்லும்பொழுது எவ்வளவு பொருள் வேற்றுமை யுண்டாகிவிடுகிற தென்பதை அறிஞர்கள் காண்பாராக. நம்மிற் பலர் தமிழ்ச் சொற்றொடர்களின் அழகையும், ஆழ்ந்த கருத்தையும் ஊன்றிப் பாராது வடமொழித் தொடர்களை எடுத்தாள்வது மிகவும் வெறுக்கத்தக்கது.

பிற மொழிகளினின்றும் சொற்களையுந் தொடர்களையும் கடன் வாங்கிக்கொளல் எம்மொழிக்கும் இழிவன்று. ஆனால், வடமொழியாளர் தம்மொழி தனிமொழி யென்றும், தென்மொழியிலிருந்து தாம் ஒன்றையும் எடுத்துக் கொள்ளவில்லை யென்றும் கதறுவதால், செந்தமிழின் சிறப்பையும், தொன்மையையும், பிறமொழிகளுக்கு அஃது அளித்திருக்கும் சொற்களையும் எடுத்தாராய்ந்து வெளிப்படுத்தல் தமிழ் மக்கள் கடமையாகும்.

க. ப. சந்தோஷம் B.A., L.T.,
ஊரீஸ் கல்விக்கூட ஆசிரியர், வேலூர்.

---

# திருக்குறள் அதிகாரமுறைச் சூத்திரம்

## அறத்துப்பால்

க பாயிரம்

க-ச கடவுள், வான், நீத்தார், அறன் இவை பாயிரம்.

உ. இல்லறம்

இல்வாழ்க் கையொடு, வாழ்க்கைத் துணைநலம்,
ரு-கச புதல்வரைப் பெறுதல், அன்பின் தகைமை,
விருந்தோ, டினியவை, செய்நன்றி, நடுநிலை,
அடக்கம், ஒழுக்கம், ஆம் இவை பத்தும்
செய்வினை அறம்எனும் செய்கட னாமே.

௩. பிறனில், பொறை, அழுக்காறு, வெஃகாமை,
௧௫-௨௪ புறங்கூறாமை, பயனில சொல்லாமை,
தீவினை அச்சம், ஒப்புர வறிதல்,
ஈகை, புகழ் இப்பத்தின் முதலேழும்
ஒழிவினை அறம்என் றோம்பப் படுமே;
இறுதியில் மூன்றும் இடைநிலை அறமே.

௪. துறவறம்

௨௫-௩௮ அருள், புலால் மறுத்தல், தவம், கூடாவொழுக்கம்,
கள்ளாமை, வாய்மை, வெகுளாமை, இன்னா,
கொல்லாமை, நிலையாமை, துறவு, மெய்யுணர்தல்,
அவாவறல், ஊழ் என்றிவை பதினான்கும்
துறவற முறையில் தொகுத்தனர் கொளலே.

## பொருட்பால்

௫. அரசியல்—௨௫.

௩௯-௫௨ இறைமாட்சி, கல்வி, கல்லாமை, கேள்வி,
அறிவு, குற்றம், பெரியார்துணை, சிற்றினம்,
தெரிந்துசெய், வலிஅறி, காலம், இடம் அறி,
தெரிந்து தெளிதல், தெரிந்து வினையாடல்
இவை யீரேழும் அரசியற் சிறப்பே.

௬. சுற்றந்தழுவல், பொச்சாவாமை,
௫௩-௬௩ செங்கோல், கொடுங்கோல், வெருவந்த செய்யாமை
கண்ணோட்டம், ஒற்றாடல், ஊக்கம், மடியின்மை,
ஆள்வினை, இடுக்கண், ஆம்பதி னொன்றும்
அரசியற் பொதுவில் அடங்கும் மன்என்ப.

௭. அங்க இயல்—௩௨.

௬௪-௮௧ மேலங்கம்—௧௮.

அமைச்சு, சொல்வன்மை, வினைத்தூய்மை, திட்பம்,
வினைசெயல், தூது, மன்னரைச் சேர்தல்,
குறிப்பறி, அவைஅறி, அவையஞ்சாமை,

நாடரண், பொருள் செயல்வகை, படைமாட்சி,
படைச் செருக்கோடு, நட்பு, நட்பாய்தல்,
பழமை யீருகப் பதினெட் டிறுப்பும்
மேலங்கமாக மேவும் முறையே.

அ. கீழங்கம்—கச.

அஉ-கூரு தீநட்போடு, கூடா நட்பு,
பேதமை, புல்லறி, விகல், பகைமாட்சி,
பகைத்திறந் தெரிதல், உட்பகை (அறிதல்),
பெரியர்ப் பிழையாமை, பெண்வழிச் சேறல்
வரைவின்மகளிர், கள், சூது, மருந்தென
ஈரே ழங்கமும் கீழென லாமே.

கூ. ஒழிபியல்—கரு.

கூசு-ளஅ குடிமை, மானம், பெருமை, சான்றாண்மை,
பண்பியல், நன்றியில் செல்வம், நாணுடைமை
குடிசெயல், உழவு, நல்குர, விரவு
இரவச்சம், கயமை, எனவே ஒருபான்
மூன்றும் ஒழிபியல் முறைவர லாறே.

## காமத்துப்பால்

ம. களவியல்—எ.

ளகூ-ககரு தகையணங் குறுத்தல், தருகுறிப் பறிதல்,
புணர்ச்சி மகிழ்தல், நலம்புனைந் துரைத்தல்
காதற் சிறப்பு, நாணுத் துறவு,
அலர்அறி வுறுத்தல், ஆம்இவை ஏழும்
களவியல் முறையெனக் கருதப் படுமே.

மக. கற்பியல்—கஅ.

தனிமையிலுறு செயல்—ம.

ககசு-கஉரு பிரிவாற் றாமை, படர்மெலிந் திரங்கல்,
கண்விதுப் பழிதல், பசப்புறு பருவரல்,

தனிப்படர் மிகுதி, நினைந்தவர் புலம்பல்,
கனவுநிலை யுரைத்தல், பொழுதுகண் டிரங்கல்,
உறுப்புநலன் அழிதல், நெஞ்சொடு கிளத்தல்,
இவை ஈரைந்தும் ஏற்புடைத் தலைவி
தனியுறு செயலெனச் சாற்றுதல் தகுமே.

௧௨ துணைநிலைச் செயல்—அ.

௧௨௬-௧௩௩ நிறையழி (வுறு)தல், அவர்வயின் விதும்பல்,
குறிப்பறி வுறுத்தல், புணர்ச்சி விதும்பல்,
நெஞ்சொடு புலத்தல் (வஞ்சப்) புலவி,
புலவி நுணுக்கம், ஊடலுவகை,
என்றிவை எட்டும் துணைநிலைச் செயலே.

---

இது, அதிகார முறையை எனது நினைவில் வைத்துக்கொள்ளும் பொருட்டு வரைந்து வைத்தேன். மறுநாள் இயற்கையாக திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை (எம். ஏ., எம். யல்) அவர்களை, சென்னையிற் சந்திக்க நேர்ந்தபோது நினைவிலிருந்த முதல் இரண்டு சூத்திரங்களைச் சொன்னேன்; அவர்கள் இது பலர்க்கும் பயன்படும் வண்ணம் நமது 'செந்தமிழ்ச் செல்வி'யில் வெளியிடுதல் நலமென்று கூறியதால் வெளியிடப் பெற்றது.

மு. போ. ஈசுரமூர்த்தியா பிள்ளை

முன்னீர்ப்பள்ளம்.

---

# தமிழ் மூலம்

முதன் முதல் தமிழர்கள் ஒலிவடிவத் தமிழ் மொழியால் உரையாடி வாழுங் காலத்திலேயே மெய்ப்பொரு ளுணர்வாய சமய வுணர்வுடையரா யிருந்திருக்கின்றனர். அச்சமய ஒழுக்கமாக ஆறுதாரங்களில் முறையே மனம் பழகி உச்சி நிலையை யிறுதியில் பற்றி யாங்கே யுண்மைப் பொருளுணர்வை யடைந்தனர்.

" நாட்டு மிதயந்தானு நாபியினி லடியாய்
ஞாலமுத றத்துவத்தா லெண்வி ரளத்தாய்
மூட்டு மோகினி சுத்தவித்தை மலரெட்டாய் [தாய்க்
முழுவித மெட்டக்கரங்கள் முறைமையினி லுடைத்
காட்டு கமலாசனமே லீசர்சதா சிவமுங்
கலாமூர்த்தமா மிவற்றின்கண் ணுகுஞ் சித்தி
வீட்டையருள் சிவன்மூர்த்தி மாணுகிச் சித்தி
மேலாகி நிற்பனிந்த விளைவறிந்து போற்றே"

(சித்தியார்)

" ஆதாரத் தாலே நிராதாரத் தேசென்று
மீதானத் தேசெல்க வுந்தீ பற
விமலற் கிடமதென் றுந்தீ பற" (உந்தியார்)

" எந்த மாதவஞ் செய்தனை நெஞ்சமே
பந்தம் வீடவை யாய பராபரன்
அந்த மில்புக ழாரூரா னெறி
சிந்தை யுள்ளுஞ் சிரத்துளுந் தங்கவே" (அப்பர்)

,, உரைப்பா ருரையகத் துள்கவல் லார்தங்க ளுச்சியாய்"

(ஆரூரர்)

" ................................இமையோர்
சிரந்தனிற் பொலியுங் கமலச் சேவடியாய்
திருப்பெருந் துறையுறை சிவனே" (வாதவூரர்)

" ..........................................
காலும்பிரம நாடிவழிக் கருத்துச் செலுத்தக் கபாலநடு
வலவேமுன் பயின்றநெறி யெடுத்தமறை மூலந் திறப்ப"

(பெரியபுராணம்)

என்பன அங்ஙன மாதலை வலியுறுத்துத் தெரிக்கும்.

உணர்ச்சி நரம்புகள் ஒன்றுகூடு மிடமாய மூளையின் பால் மனமொன்றி யாறி யாண்டிருந்து செயலற்ற மெய்யுணர்

வுறுதல் என்பது பெறப்படுவதால் உடம்பின் மேலுறுப்பாய தலையையே முடிவாய நிலைக்களமாக யோக நெறியில் குறிப்பிடப்படுகிறது. இதுபற்றி ஓவிய வடிவில் குயிற்றப்படும் கிரீத்து முதலிய புறச்சமயாசிரியர் வடிவங்களில் தலையிடத்தை யொளிக் குறியால் விளக்குகின்றனர்.

முன்னிதழில், 'தமிழர்தம் உயிர்க்குறுதி'ப் பொருளில் கூறியாங்கு நாதமெனும் ஒலியுணர்ச்சி, விழிப்பு நிலையில் மனம் முயற்சியால் அடங்கப் பெற்றக்கால் உணரப்படு மென்றமை ஐம் புலன்களும் தலை யுறுப்பினிடத்தே யுள்ளமையால் வெளிப்புலன் வழி யுள்ளொலி யுணரப்படாதபடி மனம் நிலைபெற்றபோது ஓங்காரவோசை போன்றதும் பிற பல முழவொலிகளை யொத்ததுமான ஒலிமுழக்கம் செவிவாய்க் கேட்பதுபோல் அகத்திற் புலனுமென்பர் பெரியோர். இஃதிங்ஙனமாதல்,

"நன்மணி நாத முழங்கியெ னுள்ளுற நண்ணுவ தாகா தே"

(மணிமொழி)

" நாத முடிவிலே நல்லா ளிருப்பது
நாத முடிவிலே நல்யோக மிருப்பது
நாத முடிவிலே நாட்ட மிருப்பது
நாத முடிவிலே நஞ்சுண்ட கண்டனே" (திருமந்திரம்)

'நாதமுங் கடந்த வெளியிலே நீயுநா னுமாய் நிற்குநா ளுளதோ'

(பட்டினத்தடிகள்)

இவை முதலியவற்று லறியப்படுவதாகும். சுட்டற்ற மெய் யுணர்வு நாட்டத்தின் முதற்கண் ஒலிக்குறியாக வுணரப்படுவது ஓங்காரவோசை யாதல்பற்றி அவ்வோங்காரத்தையே தமிழ் மொழியின் வரிவடிவுக்குப் பிறப்புவரி யாக்கினர் பண்டை முதற் பெரியார். தமிழ் மொழிக்கு வரிவடி வமைக்குங்கால் மெய் யுணர்ச்சிக்கும் ஒலிமுழக்குக்கும் பிறப்பிடமாய் தலையின் ஓர வடிவையே ஆதாரமாகக்கொண்டு ஓகாரம் முதற்கண் வரிவடி

வாக்கப்பட்டிருத்தல் வேண்டும். ஒலிமுழக்கம் செவிவழி கேட்பதுபோல் யோகநெறி நின்றார் அறிவாராகலின் மக்களுடம்பின் வலச் செவியைத் தொடங்குஞ் சுழிவரியாகவும் அது தொடர்ந்து தலையை மேற்புறமாகச் சுற்றி வந்தாற்போல வரையப்பட்டும் இடச் செவியைத் தீண்டி முன்னது போன்று இச் செவியினிடத்தும் சுழித்தல் செய்யப்பட்டும் அங்கிருந் திறங்கி முகவாயைச் சூழ்ந்து சிறிதள வுயர்ந்துசென்று சுழித்தலைப் பெறப்பட்டு வரையப் பட்டதும் ஆம், ஓகார வரிவடிவம்.

இதுவே மூலமாக அங்காத்தல் முதலாகவுள்ள உயிரெழுத்துக்கள் ஓகாரத்திற்கு முதற்கண் சுழித்தலைச் செய்தமை போலவே சுழியினின்றும் தொடங்கப் பெற்றுப் பல்வேறு வகைகளாகப் பழைய தமிழ்ப் பெரியாரால் வகுத்தமைக்கப் பட்டனவாக விருக்கும்.

இதுகொண்டு இவையறியற் பாலவாம்: தமிழ் மொழிக்கு மூலம் ஓகாரமாம்; மக்களின் தலைவடிவைப் புறவரியாக வரைந்ததை யொத்தது அதன் வரிவடிவம்; மக்களின் தலையாயவுறுப்பு செம்பொருளுணர்வு நெறி யிதுதானென்றறியுங் குறியாய பிரணவவொலி பிறக்குமிடம்; பிரணவ வொலிமுழக்கம் மனவடக்கம் பயிலப்படும் மகாரினது உள்ளத்தால் தலையிடத்தே யுணரப்படுவது; அம் முழங்கொலி கடந்து நிற்பது செம்பொருளாஞ் சிவம்; ஆகவே சிவநெறியாளரே தமிழ்மொழித் தோற்றத்தாளர்; சிவநெறியே தமிழ் மொழியின் மூலம். ஆதல் பற்றியே சிவன் தந்தது தமிழ் என்று சொல்லப்படுவது.

இஃதிவ்வாறாக, உயிரைச் செம்மைப் படுப்பதால் உயிரடையும் மெய்ப் பொருளுக்குச் செம்பொருளெனத் தமிழ் முதற் பெரியாரால் வழங்கப்பட்டு, செம்பொருளாவது சிவப்புப் பொருளுக்கு மாவதால் சிவப்புப் பொருளென்னும் பெயரால் **சிவம்** என்று எழுத்துச் செட்டுடனே பெயரிடப்பட்டுப் பொருளை மாறுபடாது குறிக்கக் கூடியதாய்க் கடவுட் காயிற்று.

இனி, தமிழ்மொழி தோன்றுவது பிரணவத்தினின்று மாகலின் அறிவொழுக்க முடைய கணக்காயர் தமிழ் எழுத்துப் பயிற்சியை மாணவர்க்குக் கற்பிக்கத் தொடங்குங்காலை தமிழுக்கு மூலமாய பிரணவத்தைச் சொல்லுவித்தே தொடங்குவதுண்மையாதலானும், மாணவர் தமிழ்க்கற்று அறிவுநூல் பயின்று செந்நெறி படருஞான்று பிரணவ முழக்கங் கேட்கப்படுத லுண்மையானும் சிவநெறியாற் றோன்றிய செந்தமிழ்மொழி யுயிர்களின் வாழ்க்கையில் முதலிலும் ஈற்றிலும் பிரணவத்தை முதலாக ஒழுக்கத்தில் பெறுவது. இதுகொண்டு ஆரியர் தம் வேதங்களில் முதலிலும் முடிவிலும் ஓமெனு மொலியை வரைந்துகொண் டோதுவது எவர் நடையைப் பின்பற்றியதைக் குறிக்கிற தென்பது உய்த்துணர்வார் அறியாமற் போகார். பிரணவத்தை வடமொழியாளரும் ஆள்வது கொண்டுதான் அவர் மொழியும் கடவுளினிடத்திருந்தே பிறந்த தென்று தமிழர்களின் மொழி மூலத்தைக்கொண்டு கதை கட்டிக்கொண்டனர் போலும்! சிவனது டமரகத்தினின்றும் அவர்களது அக்கரங்கள் எழுந்தனவாம். சிவமென்பது, ஐம்புலனுங்காத்து உரம் பெற்று நின்றபோது மெல்லிய தோல் மூடப்பெற்று ஒலியுணரப்படுகிற உட்செவிகளால் ஓங்காரவோதை யுணர்ந்து அது மூலமாகத் தமிழ்மொழி பிறந்ததைக்கொண்டு இருபக்கங்களில் சவ்வு என்னும் தோலால் மூடப்பெற்றுச் செய்யப்படுகின்ற ஒருவகை யொலிக் கருவியாகிய டமரகம் என்பதைக் கடவுள் கையிலேந்தி யாட்டிப் படைத்தனர் ஆரியத்தை யென்னுமவர் கூற்று தமிழ்ப் பெரியோர் செந்நெறியினின்றும் பிறந்தது தமிழென்பதைக் குறிப்பிடும் குறிப்புப் பொருளுடையதாய்ப் புராண வரலாற்றாய் முடிவது அறியக்கிடக்கிறது.

சிவலிங்க வடிவமானது, தமிழர்களின் மெய்யுணர்வு தோன்றுதல் அவர்களின் தலையாய உறுப்பினிடத்தே யாகலானும் அதற்கு நெறி ஓமெனு மொலியாகலானும், தலையின் வடிவமும் பிரணவ வரிவடிவமும் ஒன்றே யாகலானும் தலை யன்றிப் பிரணவம் இவற்றின் வடிவம்போன்ற குறியமைத்துக் கோவில்

களின் வழிபடுவது வழியாகச் செம்பொருளை யடைந்து அந்தமி லின்பத் தழிவில் வீட்டை யடையப்பெறுவர் மக்கள் என்று ஆன்றோர்களால் ஆக்கப்பட்டதா மாதலின் சிவத்தினைப் பற்றிய செந்நெறி காட்டும் சரியையாதி முறைகளில் படிந்து மனோ திடம், உள்ளத்தூய்மை முதலிய நலங்கள் வாய்க்கப் பெற்று அவைவழியாய் ஆரறிவும் பேரின்பும் அடைவர் ஆசரிப்போர்.

சிவமென்னும் சொல் செந்தமிழ் மொழியென்பதும் சிவ நெறி பற்றிய உரைகளெல்லாம் தமிழ் மூலமென்பதும் பெறப் படும்

S. K. S. ஆநந்தன்.

---

# வெறுஞ் சிறுமொழி

கோவலன் வரலாற்றைக் கோவடிகள் கூலன் சாத்தன் கேட்க வருளிச்செய்து சிலப்பதிகார மென்றதற்குப் பெயர் புனைந்தனர். இக்கோவலனோர் பெருங்குடியன்; இதைப்பற்றி ஐயம் அணுவளவும் நிகழவேண்டியதில்லை. அவனும் அவன் மனைவி கண்ணகியும் பெருங்குடியிற் பிறந்தவ ரென்பதை எவரும் மறுக்க முன்வரார். கோவலன் மாசாத்துவா னென் னும் "இருநிதிக் கிழவன் மகன்." கிழவன் மகன் எனக் கூறிய தால், கிழவி பெற்ற குழவி என்பது பெறப்படும்.

* * *

கண்ணகியை மணந்த கோவலன் சிலநாட் சென்றபின் அவளை மறந்து மாதவி என்ற பொதுமகளின் மையலிலாழ்ந்து முன்னோர் திரட்டிய பொருட் குன்றைக் குன்றவைத்தான்; இரு நிதிக் குப்பையைக் குப்பையாக்கினான். செல்வத்தைக் குப்பை என்றிகழ்தல் சான்றோர் செய்கையாகும். ஈத்துவக்கு மின்பம் ஈட்டிவைப்பதாற் பெறப்படுவதில்லை எனும் பேருண்மையைக் கோவலன் நன்குணர்ந்திருந்தான். இடம் விட்டு இடம்பெயர்ந்து போவதாற் செல்வம் எனப் பெயர் பெற்ற ஒன்றை ஓரிடத்திற்

குவித்துவைத்துக் காத்து நெஞ்சு புண்ணுவது பொருளுணர்ந் தார்க்குப் பொருந்தாதென்று பொதுமக்கள்பால் அதைக் கொடுத்தானென்று கொளினும் அமையும்.

* * *

கோவலனுக்கு உயிர்த்துணையாகிய கண்ணகி, கணவனுக் குத் துணைவியாயிருந்து, அறம் பொருளின்பம் மூன்றையும் விட்டதே பேரின்பவீடு என வாளாவிருந்தாள். மற்றுமவள் இல்லாள் என்ற பெயரைத் தனக்கு முற்றும் உரிமையாக்கிக் கொள்ளும் நோக்கத்துடன் ஐம்பொறியடக்கி அகத்திலிருந்த துடன்; நகை, பொருள் ஒன்றும் இல்லாளாயினள்.

"இல்லா ளகத்திருக்க இல்லாத தொன்றில்லை"

இதன் பொருள்:—(ஒன்றும் முயற்சி செய்யாது வீட்டி லிருக்கும்) மனைவி அகத்திலிருக்க, அகத்தில் இல்லாத பொருள் ஒன்றன்று. பல பொருள்கள் வீட்டிலில்லாமற் போகுமென் பது கருத்து.

* * *

இந்திர விழவில் மாதவி பாடிய பாடலின் பொருளைப் பிறழ வுணர்ந்த கோவலன், மருந்து பிறிதில்லாப் பெருந்துய ரெய்தி, கண்ணகியை நினைந்து இரங்கி, வீட்டையடைந்து மனைவியின் மேனி வாட்டத்தையும் நெஞ்சு வருத்தத்தையுங் கண்டு உளம் புழுங்க, மைவிழிக்கண் மாதவிக்குப் புதுப்பொருள் கொடுக்க வியலாது வருந்தினனென் றெண்ணிய கண்ணகி, தன் சிலம்பை ஏற்றுக்கொள்ளும்படி வேண்டினுள். இங்ஙனம் பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன், தலைவியைக்காண நேரிட்ட காலை "ஊடலே புலவியே துனியே" என்றிவை நிகழ்தல் அகத்திணை வழக்கு ; ஆனல் கோவடிகள் இதை எட்டுணையுங் கருதாது மேற்சென்றார். அவர் அடிகளானமையின் அதை விலக்கினரோ? அல்லது தம் கொள்கைக்கு அத்தகைய அகச்சுவையைப் பற்றிப் பேசுவது பொருந்தாதென்று விலகினரோ? அல்லது பத்தினிக்

கடவுளாய்க் கண்ணகி விளங்குவதற் கஃதோ ரிடையூறாகு மென்று நாணிச் சென்றனரோ? அறியேம்.

* * *

கண்ணகி கொடுத்த சிலம்பை விற்று அதனால் வரும் பொருளை முதலாகக்கொண்டு பொருளீட்ட வெண்ணிய கோவலன் மதுரைக்குச் சென்றான். அங்கே தன் சிலம்பை ஒரு பொற்கொல்லன் கையிற் கொடுக்க, அவன் அச்சிலம்பை எடுத்துப்போய், அப்போதுதான் பரத்தையிற் பிரிந்து வந்த பாண்டியனுக்குக் காட்டி, களவுபோன கோப்பெருந் தேவியின் சிலம்பே யதுவென்று முறையிட்டான். ஊடியிருந்த அரசியின் உளத்தைப் பிரியப்படுத்தும் நோக்கத்துடன் ஒன்று கிடக்க ஒன்று சொன்ன பாண்டியன் கூற்றால் வினை விளைந்தது.

* * *

சோழநாட்டிற் பரத்தைக்குப் பொருளனைத்தையுமளித்து, மனைவியின் சிலம்பை விற்றுப் பிழைக்க, மதுரைக்குக் கோவலன்வர, "வடகடலிட்ட ஒருநுகம் ஒருதுளை, தென்கடலிட்ட ஒருகழி சென்று கோத்தாற்போல" பாண்டி நாட்டிற் பரத்தையிற் பிரிந்து வந்த செழியன் கையில், நெடுநாள் முன் களவுபோன தன் மனைவியின் சிலம்பையொத்த கண்ணகியின் சிலம்பு வந்து சேர்ந்தது. சூழ்வினைச் சிலம்பு காரணமாகச் சிலப்பதிகாரமென்னும் பெயர்.

* * *

வேம்பன் சொல் வேம்பினும் கைப்பாயிற்று.

* * *

கோவலன் மடிந்தான். ஆறிய கற்புடைய கண்ணகி சீறிய கற்புடையாளாயினள். ஆதலின், "பெய்யெனப் பெய்யுமழை" என்பதுபோய் "பற்றெனப் பற்றுந்தீ" ஆயிற்று.

(தொடரும்)

க. ப. சந்தோஷம் B.A., L.T.,

---

Printed at the 'Sivakami Vilasam' Press, & Published by
V. Subbiah for the S. I. S. S. W. P. Society Ltd, Madras.